உ

ஸ்ரீ குருப்யோ நம:

ஜயஜய சங்கர! ஹரஹர சங்கர!!

# ஏகாதசி மஹாத்மியம்

(இருபத்தைந்து ஏகாதசிகளின் மகிமை)

# அனந்த வ்ரத மஹாத்மியம்

(பூஜையுடன்)



ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத வேத ஸபா,

திருவல்லிக்கேணி : : சென்னை-5.

1978] ஜூலை வெளியீடு [ஞானயக்ஞம்

உ

ஸ்ரீ க்ருஷ்ணாய நம:

# வைகுண்ட ஏகாதசி மஹாத்மியம்

## இருபத்தைந்து ஏகாதசிகளின் மஹிமை

## அவதாரிகை

ஏகாதசி என்பது ஓர் உத்தமபுண்யகாலம். பரமாத்மாவுக்குப் பரம ப்ரியமான திதி அது. அதைப்போற்ருத புராணமில்லை. அதை ஸ்துதிக்காத தர்மநூலில்லை ஆறு வயது முதல் அறுபது வயதுவரையிலுள்ளோர் அனைவரும் அதை அவச்யம் அநுஷ்டிக்கவேண்டுமென பகவான் ஆணையிட்டார். கங்கையைவிட சிறந்த தீர்த்தமில்லை. விஷ்ணுவைவிட உயர்ந்த தேவரில்லை. தாயிற் சிறந்ததோர் கோயிலுமில்லை. காயத்ரியைவிட உயர்ந்த மந்த்ரமில்லை. ஏகாதசியைவிட சிறந்த விரதமில்லை என ஒருமிக்கப் பதினெண்புராணங்களும் அதைப் போற்றுகின்றன. அத்தகைய ஏகாதசி எப்படி உண்டானது? அதை எங்ஙனம் அநுஷ்டிக்கவேண்டும்? ஏகாதசிகள் எத்தனை? அவைகளின் பெயர் என்ன? யார் அதை அநுஷ்டித்தனர்? என்ன பயன் பெற்றனர்? என்று நாம் அறியவேண்டாமா?

பதினெண் புராணங்களில் பத்மபுராணம் மிகச்சிறந்தது. அதிலும் உத்தரகாண்டம் உத்தமமானதென்பர். ஆங்கு இது விரிவாகக் காணக்கிடக்கின்றது. ஒருஸமயம் உத்தமபக்தரான நாரதரிஷி கைலாயங்கிரி சென்ருர். நந்தியை வணங்கி விடைப்பெற்ருர். உள்ளே சென்று உமாபதியைத் தர்சித்தார். அவர் தாள்களில் விழுந்து ஸ்துதித்தார் பக்தனை ஆசீர்வதித்து பகவான் யாதுவரம் வேண்டுமென்ருர். ஏகாதசிகளின் வரலாற்றை விரிவாக உரைத்தருள வேண்டுமென்ருர் நாரதர். கைலாஸநாதர் கூறினுர்:—'அன்ப! இதே விஷயத்தை முன்னொரு ஸமயம் தர்மராஜன் கண்ணனை வினவினுர். க்ருஷ்ணன் தர்மருக்கு உரைத்த வண்ணம் யான் விளம்புகிறேன் கேள்'.

1. உற்பத்தி ஏகாதசி:— க்ருதயுகத்தில் முரன் என்ருெர் அரக்கனிருந்தான். அவன் மிகக் கொடியவன். பலசாலி. தேவர்களையும் அவரைப்போற்றும் அந்தணரையும்

வருத்தி வந்தான். இந்திரன் அவனுக்குப் பயந்து ஸ்வர்க்கத்தை விட்டு ஓடினன். கைலாயஞ் சென்று சிவனைச் சரணமடைந்தான். அவர் பரிபாலந கர்த்தாவான பரந்தாமனிடம் செல் என்றார். தேவராஜன் பாற்கடலையடுத்து பரமாத்மாவை வணங்கித் துதித்தான். அவனது கருத்திற்கிசைந்து கருட த்வஜன் போர்கோலங்கொண்டு கிளம்பினார். அமரரனைவரும் உடன் சென்றனர். முரனும் அரக்கர் படையுடன் போருக்கு வந்தான். சக்ரபாணி சக்ராயுதத்தால் அஸுர ஸேனையனைத்தையும் அழித்தார். முரன் அதைக் கண்டு வீராவேசங்கொண்டு எழுந்தான். தான் ஒருவனுகவே இருந்து அமரர் படையைப் புறங்காட்டி ஓடும்படி அடித்தான். முரனும் முராரியும் ஆயிரம் ஆண்டு ஸமர்புரிந்தனர். முரனது சக்தியைக் கண்டு விஷ்ணு வியந்தார். தான் களைத்தவர் போல் பயந்து பதரிகாச்ரமம் சென்றார். ஸிம்ஹாவதீ என்ற குஹையை கண்டார். அது பன்னிரண்டு யோஜனைதூரம் விசாலமானது. அதனுள்ளே சென்று திருமால் பள்ளிகொண்டார். அஸுரனும் அவரைப் பின் தொடர்ந்து சென்றான். உறங்கும் புருஷோத்தமனைக் கொல்லக் கருதி வாளை உருவினன். பரமாத்மாவினது உடலிலிருந்து ஒரு கன்னிகை உதித்தாள். அவள் அழகிற் சிறந்தவள். ஆயினும் கரங்களில் பயங்கரமான ஆயுதங்களை ஏந்தி நின்றாள். முரனைப் போருக்கழைத்தாள். அரக்கன் அம்பு எடுக்குமுன் அம்பிகை ஓர் ஹுங்காரம் செய்தாள். முரன் ஓர் பிடி சாம்பலாகிக் கீழே விழுந்தான். உடனே பரமனும் நித்திரை விட்டெழுந்தார். தன்னுடலிலிருந்து கிளம்பிய சக்தியைக் கண்டு வியந்தார். அவள் செய்த சேவையை கொண்டாடினார். ஏகாதசி என அவளுக்கு நாமம் சூட்டினார். அவள் பிறந்த தினத்திலே உபவாஸமிருந்து தன்னை பூஜிப்போருக்கு வைகுண்டமளிப்பதாக வாக்களித்தார். ஏகாதசி அநுஷ்டாநம் செய்வோருக்கு இம்மை சுகம், மறுமை சுகம் கீர்த்தி, செல்வம், ஆரோக்யம் முதலியன உண்டாகுமென்றார். அது மார்கழி மாதம க்ருஷ்ண பக்ஷத்திலுதித்ததால் அதற்கு உற்பத்தி ஏகாதசி என்று பெயருண்டாயிற்று [அன்று விதிப்படி உபவாஸமிருந்து பரமனைப் பூஜிப்போர் பரமபதமடைவர். இம்மையிலும் கோரிய பயனைப் பெறுவர்.]

2. மோக்ஷ ஏகாதசி :—மார்கழி மாதம் சுக்ல பக்ஷ ஏகாதசிக்கு மோக்ஷா என்று பெயர். பகவான் மாதங்களில் மார்கழி மாதமாயிருக்கிறார். அதனால் இந்தமாத ஏகாதசி மிகச் சிறந்ததாகும். இதைப் பெரிய ஏகாதசி என்றும்

வைகுண்ட ஏகாதசி என்றும் கூறுவார்கள். அச் சமயம் அச்சுதனை அர்ச்சிப்போர் வைகுண்டம் செல்வர். மோக்ஷமடைவர். அவர்களது மூதாதைகளும் முக்தி பெறுவர்.

கம்பமெனும் நகரிலே வைகாநஸன் என்றோர் அரசனிருந்தான். அவன் குடிகளை அன்புடன் பரிபாலித்து வந்தான். ஓரிரவு மன்னன் ஒரு கனவு கண்டான். அது அவனுக்கு அதிக துன்பத்தை அளித்தது. காலையில் எழுந்து காலைக்கடனை முடித்தான். அந்தணோத்தமரை அடுத்து வேண்டினன். (பெரியோரே! சென்ற இரவு யான் ஒரு கனவு கண்டேன். எனது மூதாதைகள் நரகத்தே விழுந்து துன்புற்றனர். என்னை நோக்கி மைந்தா! நாங்கள் படும் கஷ்டத்தைக் காணுயோ? இதை அகற்ற ஏதேனும் வழி தேடாயோ? என்று விம்மி விம்மி அழுதனர். இதற்கு யான் என் செய்வது? என்றான். பூஸுரர்கள் 'வேந்தே' பர்வதர் என ஓர் முனிபுங்கவர் இருக்கிறார். அவர் எல்லாமறிந்தவர். தங்கள் மூதாதைகள் ஏன் நரகத்தில் இடர்படுகின்றனர்? எங்ஙனம் அவர்களைக் கரை ஏற்றுவதென்பதை அவரே அறிவர். அப்பெரியவரை அடுத்து இதற்கு வழிதேடுவாய் என்றனர்.

வைகாநஸன் வனம்சென்றான். பர்வதரைத்தேடி அவர் பாதத்தில விழுந்தான். கனவைக் கூறி பெற்றோர் நரகத்தைக் கடக்க யாது உபாயமென்றான்? முக்காலத்தையும் உணர்ந்த முனிபுங்கவர் ஞானக்கண்ணை மூடினார். ஞானக்கண்ணைத் திறந்தார். உண்மையை உணர்ந்து அரசனுக்கறிவித்தார். மன்ன! மாநிலத்தை ஆண்ட உன் தந்தை பன்னனிற் சிறந்தவன் யான் என கர்வங்கொண்டான் இல்லற தர்மத்தில் ஈடுபட்டவர் ஸத்புத்ரன் உண்டாவதற்காக ருது காலத்தில (மாதவிடாய் ஆன பதினாறு நாட்களில்) சுபதினத்திலே ஆண் பெண்கள் கூடவேண்டுமென்ற விதியை மறந்தான். தன் மனைவி அதை நினைவூட்டியும் அவளை மதியாது வேறிடம் சென்றான். அந்த பாபத்தால் உன் தந்தை நரகபாதனையைப் பெறுகின்றான். நீ உன் மனைவி மக்களுடன் மோக்ஷ ஏகாதசியை விதிவழுவாது அனுஷ்டித்து அதை உனது மூதாதைகளுக்கு அர்ப்பணம் செய்) என்றார். வைகாநஸன் பித்ருக்களது நன்மையை நாடி மிகபக்தி சிரத்தையுடன் விரதத்தைச் செய்தான். அந்த க்ஷணமே அவர்கள் விமானத்தின் மீதேறி மைந்தனை வாழ்த்தினர். அன்றுமுதல் வைகாநஸன் மோக்ஷ ஏகாதசியை விடாது அநுஷ்டித்தான். அது சிந்தாமணிக்கு ஈடானது. நினைத்த பொருளை அளிக்க வல்லது. [தமக்கும் முன்னோருக்கும் நற்கதி தரும்.]

3. ஸபலா:— தைமாத க்ருஷ்ண ஏகாதசிக்கு ஸபலா என்று பெயர். இந்த ஏகாதசியில் உபவாஸமிருந்து பகவானைப் பூஜித்து, ஸகல கனிகளையும் நிவேதனம் செய்ய வேண்டும். அன்று தீபதானம் செய்வது சிறந்த தர்மம். இரவெல்லாம் பகவானது சரிதத்தைக்கேட்டு கண்விழிக்க வேண்டும். ஒருவகைப்பட்ட மனதுடன் பகவானை த்யானம் செய்தல் நலம்.

சம்பாவதீ நகரிலே மாஹிஷ்மதன் என்று ஒரு மன்னனிருந்தான். அவனுக்கு ஐந்து குமாரர்கள் பிறந்தனர். மூத்தவன் பெயர் லூம்பகன். அவன் மிக பாபி. மதுபானத்திற்கும் பிறர் மனைவிக்கும் தன் தந்தை பொருளை செலவு செய்தான். அவன் தேவநிந்தை பக்தநிந்தை செய்யாத தினமில்லை. இதைக் கண்டு அவன் தந்தை சிந்தை நொந்தார். அப்புதல்வனைக் காட்டிற் கொண்டு விடும்படிக்கூறினார். லூம்பகனைக் காவலாளிகள் கண்ணுக்கெட்டாத கானகத்தில் விட்டுத் திரும்பினர். அவன் அரண்யத்திலிருந்து கொண்டே அருகிலுள்ள நகரத்தில் திருடிவந்தான். ஓரிரவு காவலாளிகள் அவனைப் பிடித்து நையப்புடைத்தனர். தான் மாஹிஷ்மதராஜனது குமாரன் என அவன் கூறினான். அதைக்கேட்ட காவலாளிகள் அவனிடம் கருணைகொண்டு விட்டு விட்டனர். அன்று பட்ட அடி, அவன் திருட்டை விடும்படிச் செய்தது. லூம்பகன் ஒரு மரத்தடியே தங்கி கந்தமூலங்களை உண்டு வாழ்ந்தான். ஒரு ஸமயம் குளிரால் மெலிந்து உணவு மின்றி ஒரு மரத்தடியே தங்கினான். வெய்யில் ஏற ஏற குளிரகன்றது. கனிகளைக் கொண்டுவர வெளியிற் சென்றான். கனிகள் கிடைக்காததால் அலைந்து திரிந்தான். கிடைத்ததைக் கொண்டுவருவதற்குள் பொழுதுசாய்ந்தது. தனது மரத்தடியே வந்து சேர்ந்தான். குளிராலும் பசியாலும் வாடி மெலிந்து உறக்கமுமில்லாமல் படுத்திருந்தான். கிடைத்த கனியைப் பகவானுக்கு அர்ப்பணம் செய்தான். பொழுது விடிந்தது. ஆகாயத்தில் ஓர் குரல் கேட்டது. லூம்பக! நேற்று ஸபலா ஏகாதசி. நீ தங்கி நின்றது அரசமரம். இரவிலுமுறங்காது கனிகளை மாதவனுக்களித்தாய். ஆதலின் உன் பாபம் அகன்றது. விரைவில் ராஜ்யத்தை அடைவாய் என்றது. உடனே அருகில் பட்டத்து யானையுடன் தன் தந்தையின் அமைச்சர்கள் நிற்கக் கண்டான். அவர்கள் லூம்பகனை அழைத்து பட்டாபிஷேகம் செய்வித்தனர். லூம்பகன் நீதி தவறாது ராஜ்யபாரம் செய்தான். அவனுக்கோர் புதல்வன் பிறந்தான். அவனிடம் ராஜ்யத்தை அளித்து லூம்பகன் விஷ்ணுபக்தியிலீடுபட்டு வைகுண்டஞ் சென்றான். [பாபத்தை அகற்றுமிது.]

4. புத்ரதா:—தைமாத சுக்ல ஏகாதசி புத்ரதா எனப் படும். பத்ராவதி பட்டணத்தை ஸுகேதுமான் என்ற அரசன் ஆண்டுவந்தான். அவனது மனைவியின் பெயர் சம்பகா. இருவருமாக இல்லற தர்மத்தை இடைவிடாது அநுஷ்டித்து வந்தனர். அவர்கள் எல்லாச் செல்வங்களைப் பெற்றிருந்தும் புத்ர பாக்யமின்றி வருந்தினர். புதல்வனற்றவருக்கு நற்கதி கிடையாது. அவரளிக்கும் ச்ராத்தத்தைப் பித்ருக்கள் மிக்க துன்பத்துடனே ஏற்கின்றனர், என்று அரசன் மனம் நொந்தான். முற்பிறவியில் செய்த தீவினையோ இது என்று அதையகற்ற கருமங்களைச் செய்தான். அப்போதும் மக்கட் பேறு பெற்றானில்லை. வெறிபிடித்தவன்போல் பரிமீது தறிவனம் சென்றான். எங்கு செல்கிறோம், எதற்காக செல்கிறோமென்று அவன் அறியவில்லை. அழகிய ஓர் ஸரஸ்ஸைக் கண்டான். அங்கு சென்றவுடன் அவனுக்குச் சில சுபஸூசகங்கள் உண்டாயின. அதைக் கண்டு நமக்கும் நற்கதி கிடைக்குமோ என வியந்தான். ஸரஸ்ஸின் அருகே சில ஆச்ரமங்களைக் கண்டான். அங்கு சென்று ஸூர்யனைப்போல் விளங்கும் ரிஷிகளைத் தர்சித்தான். மெய்மறந்து அவர்களைப்பணிந்து துதித்தான். தாங்கள் யார்? எங்கு வந்தீர்கள்? என வேந்தன் வினவினான்.

அவர்கள், "நாங்கள் விச்வே தேவர்கள். மாகமாஸம் அருகில் இருப்பதால் இங்கு புனலாட வந்தோம். இன்று புத்ரதா ஏகாதசி இன்று உபவாஸமிருந்து பரமனைப் பூஜிப்போர் புத்ரனைப் பெறுவர் என்று உரைத்தனர். இதைக்கேட்ட அரசன் மிகஸந்தோஷமடைந்தான். அவர்களுடன் அந்த ஸரஸ்ஸில் நீராடினான். உபவாஸமிருந்து புருஷோத்தமனைப் பூஜித்தான். உடனே மன்னன் மனைவி கருதரித்தாள். பத்தாம் மாதத்தில் ஓர் உத்தம புதல்வன் பிறந்தான். அரசன் அளவிலா மகிழ்ச்சிகொண்டான்: தன்னாட்டிலுள்ளோருக்கு இந்த ஏகாதசியை அநுஷ்டிக்கும்படி கட்டளையிட்டான். [புத்ரபாக்யத்தை அளிக்குமிது.]

5. ஷட்திலா:— மாசிமாதம் க்ருஷ்ண ஏகாதசிக்கு ஷட்திலா என்று பெயர். தால்பயர் என்ற முனி புலஸ்தியரை தர்சித்து ப்ரும்மஹத்தி, கோஹத்தி, பிறர்பொருளை அபகரித்தல் முதலிய பாபங்கள் எதனால் அகலும் என்று வினவினார். புலஸ்தியர் அதற்கு விடையளித்தார்:—மாகமாஸ ஆரம்பத்தில், பசுவின் சாணம் பூமியில் விழுவதற்குள் கையிலேந்தி அதில் எள்ளையும் பருத்திக்கொட்டையையும் சேர்த்து ஓர் சுத்தமான இடத்தில் வைக்கவேண்டும்.

பௌர்ணமிவரை அது ஈரமாக இருந்தால் நம்பாபம் அகலும்-பூஜை ஆரம்பிக்க வேண்டும். நூறு கூஷ்மாண்டம் அல்லது தேங்காய் அல்லது கொய்யாப்பழம் அல்லது கொட்டைப் பாக்கைக்கொண்டு பகவானை அர்சித்து அர்க்யமளிக்க வேண்டும். ஒரு பிராம்மணனை விஷ்ணுவாக வரித்து ஜல பாத்ரம் பாதுகை குடை கரும்பு எள்ளுடன் பாத்திரம். கறுப்பு பசு இவைகளைத் தானம் செய்ய வேண்டும் திலத்தை அரைத்து உடலில் பூசிக்கொண்டு திலஸ்நானம், திலதானம், திலஹோமம், திலஜலதானம், திலான்ன போஜனம் என்று ஆறுவகையாக திலத்தை உபயோகிப்பதால் ஷட்திலா என்று அதற்குப் பெயர் வந்தது.

அவனியில் ஓர் அந்தணமாது ஸகல தர்மங்களையும் செய்து வந்தாள். ஆனால் அன்னதானம் மட்டும் அவள் செய்ததில்லை. அவளுக்கு அன்னதானம் செய்யும்படி அருள் புரிய பகவானே ஸன்யாஸி வேடம்பூண்டு வந்தார். அவள் அர்க்கியம் பாத்யம் முதலியவைகளை அளித்து உபசரித்தாள். பிக்ஷை இடு என்று அவர் பாத்ரத்தை நீட்டினார். அவளுக்குக் கோபம் பிறந்தது. மண்சட்டியை எடுத்துப் பாத்ரத்தில் போட்டாள். உடனே பகவான் மறைந்தார். சில காலம் சென்றபின் அவள் விருதம், காநம் முதலிய தர்மங்களால் சரீரத்துடன் ஸ்வர்க்கம் சென்றாள். அவளுக்கு அங்கு அழகியதோர் அரண்மனை தந்தனர் அதை அவள் சுற்றிப் பார்த்தாள். பற்பல தாஸர்கள் பணிசெய்யக் காத்திருந்தனர். எல்லாச் சிறப்புமிருக்கக் கண்டாள். பசிக்குப் புசிக்க அங்கு உணவில்லை. பசி அவளை வாட்டியது. பிக்ஷை இடாது மண் கட்டியை எறிந்த பிக்ஷுக்கன் அங்கு அவள் எதிரிற்றோன்றினர். அவள் எனது தவத்திற் கேற்றபடி இங்கு ஸுகமில்லை. பசியால் வாடுகிறேன் இதற்கென்ன காரணம் என்று அவரை வினவினாள்; நீ அன்னதானம் செய்யாததால் ஸ்வர்க்கம் வந்தும் உன்னைப் பசி வாட்டுகிறது. உன்னை தர்சிக்கப் பல தேவப் பெண்கள் வருவர். நீ உள்ளே சென்று கதவைத் தாளிட்டுக்கொள். ஷட்திலா ஏகாதசியின் புண்யத்தை அளித்தால் கதவைத் திற! என்று கூறி அவர் மறைந்தார். அங்ஙனமே தேவ பத்னிகள் வந்தனர். அவள் பிக்ஷுகர் சொன்னபடி ஷட்திலா புண்யத்தைக் கேட்டாள். பலரும் அதை அளிக்க விரும்பாது சென்றனர். ஒருத்திமட்டிலும் அளித்தாள். அதனால் அந்த வீடு உணவுப் பொருள்களால் நிறைந்தது. ஷட்திலா விரதத்தால் பிராம்மணியின் பசி அகன்றது. அவள் சுகமெய்தினாள்-

[அன்னமளிப்பதிது.]

6. ஜயா:— மாக சுக்ல ஏகாதசி ஜயா எனப்படும். இது பிசாச ஜன்மாவை மாற்றவல்லது. மால்யவான் என்று ஒரு கந்தர்வனிருந்தான். அவன் அழகிற் சிறந்தவன். கான கலையில் கரைகண்டவன். அவன் புஷ்பவந்தி என்ற கந்தர்வ கன்னிகையை மணந்தான். அவள் ரதியைவிட அழகுள்ளவள். இனிய குரலுடையாள். இவர்கள் இந்தரனது பணியாளர்கள். அங்கு ஆடிப்பாடி ஸபையைக் களிக்கும்படி செய்வது இவர்கள் வேலை. ஒரு ஸமயம் இவர்கள் தங்கள் பணியைச் செய்தனர். ஒருவர் மேல் ஒருவர் அளவில்லா மோஹம் கொண்டனர். ஆதலால் பாட்டை மறந்தனர். அபஸ்வரமாகப் பாடினர். இதைக்கேட்ட இந்திரன் சினங்கொண்டான். இருவரையும் பேயாகிப் பாரினில் திரியும்படி சபித்தான். அங்ஙனமே அவர்கள் பல்லாண்டு பூமியில் வந்து பல தன் பங்களை அனுபவித்தனர். ஒருநாள் இருவரும் தற்செயலாக ஒரு மரத்தினடியே தங்கினார். தங்கள் விதியை நினைத்து உணவின்றி வருந்தினர். பசியாலும் துன்பத்தாலும் அன்றிரவு ஒருவரும் உறங்கவில்லை. இவர்கள் தங்கிய மரம் அச்வத்த விருக்ஷம். உபவாஸமிருந்த தினம் ஜயா ஏகாதசி. ஆதலால் அவர்களது பேய் ஜன்மமகன்று ஸ்வர்க்கம் சென்றனர்.

[பேயுக்கும் நற்கதி தருமிது.]

7. விஜயா :—பங்குனி க்ருஷ்ண ஏகாதசி விஜயா எனப்படும். இது ஜயத்தை அளிக்கவல்லது. அவரவர் கோரும் விருப்பைப் பூர்த்தி செய்யும் அன்று ஏழு தான்யங்களை ஒன்றன்மேல் ஒன்றாகப் பரப்பி அதன் மேல் கலசத்தை வைத்து ஸ்ரீ நாராயண மூர்த்தியின் பிம்பத்தை அமைக்க வேண்டும். விதிப்படி பூஜை செய்து துவாதசியன்று ஓர் ஸாதுவுக்கு அன்னமளிக்கவேண்டும். அக்கலசத்தை அவருக் களித்துப் பாரணை செய்பவேண்டும். தந்தை சொற்படி ஸ்ரீ ராகவன் வனம் சென்றானல்லவா? ராவணன் சீதா பிராட்டியைத் தூக்கிச் சென்றான். அவளை வீரனான ஹனுமான் லங்கையில் தர்சித்தான். ராமச்சந்திரனிடம் அதை அறிவித்தான். அவர் எங்ஙனம் கடலைக் கடப்பது? அஸுரனை எப்படி வெல்வது? என்று சிந்தித்தார். பகதால்ப்யர் எனும் முனிவரைச் சரணமடைந்தார். இதற்கு ஓர் உபாயங் கூறும்படி வேண்டினார். அவர் விஜயா ஏகாதசியை விதியுடன் உபதேசித்தார். அந்த புண்யத்தால் கடலைக் கடந்தார். பகைவனை வென்றார். ஜயத்துடன் அயோத்யைக்கு வந்து பட்டம் சூட்டிக் கொண்டார். [துன்பக்கடலைக் கடக்குமிது.]

8. ஆமலகீ :—பங்குனி சுக்ல ஏகாதசிக்கு ஆமலகீ என்று பெயர். அன்று சுத்தோபவாஸமாயிருத்தல் வேண்டும். அன்று பாபிகளுடன் பேசலாகாது. நெல்லி மரத்தருகே சுத்தம் செய்து கலசத்தை வைக்கவேண்டும். அதன் மீது பரசுராமரது பிம்பத்தை வைத்து விதிப்படி பூஜிக்கவேண்டும். பின்னர் நெல்லிமரத்தை பிரதக்ஷிணம் செய்து பூஜையை பூர்த்தி செய்தல் வேண்டும். இங்ஙனம் செய்தோர் எல்லா புண்ய நதிகளிலும் புனலாடிய பயனைப் பெறுவர். நெல்லி மரத்தின்கீழ் கண்விழிப்போர் ஆயிரம் கோதானம் செய்த பயனைப் பெறுவர்.

முன் ஒருஸமயம் உலகெல்லாம் பரமனிடம் ஒடுங்கிய பிறகு எங்கும் ஒரே ஜலமயமாகக் காணப்பட்டது. அச்சமயம் பரமாத்மாவினுடைய முகத்திலிருந்து ஒரு ஜலபிந்து பூமியில் விழுந்தது. அது நெல்லிமரமாக விளங்க, இதுயாதெனை அறியாது தேவர் விழித்தனர். அச்சமயம் ஆகாயத்திலிருந்து அசரீரியான வாக்கு ஒன்று தோன்றியது. இது பரமாத்மாவின் அருளால் தோன்றிய மரம். அச்சுதனது அம்சம் நிறைந்த விருக்ஷம். இதை நினைப்போர் கோதான பயனைப் பெறுவர். அதைத் தொட்டால் இருமடங்கு பலன். அதன் கனியைப் பூஜிப்போர் மும்மடங்கு பயனைப் பெறுவர். அதனடியில் ஹரியும், இடையில் ஹரனும், நுனியில் ப்ரம்மனும் வஸிக்கின்றனர். கிளைகளில் முனிவரும், இலையில் வஸுக்களும், புஷ்பங்களில் மருத்துக்களும், பழத்தில் பிரஜாபதிகளும் வஸிக்கின்றனர். இங்ஙனம் கூறிய அசரீரியான தேவர் யார்? என முனிவர் வினவினர். உலகிற்குக் காரணம் யாரோ? உலகமாய்த் தோன்றி நின்றவன் யாரோ? அவரே யான் என அசரீரி கூறிற்று. அங்ஙனமுரைத்தவன் எல்லாம்வல்ல இறைவனே என்று உணர்ந்து அனைவரும் வணங்கினர். [கோதான பலனைத் தருமிது.]

9. பாபமோசனிகா:—சைத்ர க்ருஷ்ண ஏகாதசி பாபமோசனிகா என்றழைக்கப்படும். மாந்தாதா என்ற அரசன் லோமேசரை வணங்கி இதன் பெருமையைப் பகரும்படி வினவினன். முன் ஒரு ஸமயம் சைத்ரரதம் எனும் அழகிய வனத்தில் மஹரிஷிகள் தவம் செய்தனர். ஆங்கு மஞ்சுகோஷை எனும் அப்ஸரஸ் ஸ்திரீ வந்தாள். முனிவரது மத்தியில் மன்மதனைப் போல் விளங்கும் மேதாவி என்ற மஹரிஷியைக் கண்டாள். இனிய குரலால் முனிவரை மயக்கி அவருடன் காமஸுகத்தை அனுபவித்தாள். பலநாள் சென்றபின் விடையளிக்கும்படி மஞ்சுகோஷை வேண்டினாள். முனிவர் சற்று பொறுத்திரு, போகலாம் என்றார். அவளுடன்

கூடி பல்லாண்டு சென்றதையும் முனிவர் அறியவில்லை. மறுபடியும் மஞ்சுகோஷை விடைபெறிக்க வேண்டினாள். மஹரிஷி, நீ வந்து சில நிமிஷங்களே ஆயின. இன்னும் சற்று நேரம் பொறுத்திரு. போகலாம் என்றார். இங்ஙனம் பல்லாண்டு கழிந்தன. மேதாவி விழித்து எழுந்தார். பலகாலம் பாழானதை அறிந்தார். சிந்தை நொந்து அவள்பால் சினங்கொண்டார். அவளைப் பேயாகும்படி சபித்தார். அவள் அவரடி பணிந்து சாபத்தை அகற்றும்படி வேண்டினாள். மேதாவியும் தன் குற்றத்தை உணர்ந்து அவளை மன்னித்தார். பாபமோசனி என்ற ஏகாதசியின் விரதத்தால் உன் பாபமகலும் என்றார். அவரும் தன் தந்தையான ச்யவனரிடம் சென்று நடந்ததைக் கூறினார். அவரும் இந்த ஏகாதசியைக் கொண்டே மேதாவி இழந்த தவத்தைத் திரும்பப் பெறும்படி கூறினார். மேதாவியும் மஞ்சுகோஷையும் விதிவழுவாது பாபமோசனியை அநுஷ்டித்து தத்தம் இஷ்டத்தைப் பெற்றனர். [இதைக் கேட்டோர் படிப்போர் பாபமும் போகும்.]

10. காமதா:—சைத்ர சுக்ல ஏகாதசி காமதா என்றழைக்கப்படும். அதன் பெருமையைக் கூறும்படி திலீபன் வஸிஷ்டரை வேண்டினான் அவர் தனது சிஷ்யனுக்குரைத்தார். நாகலோகத்தில் புண்டரீகன் என்றோர் நாகராஜனிருந்தான். அவன் மிக்க புண்யசாலி. அவனது ஸபையில் கந்தர்வர் வந்து கானம் செய்வது வழக்கம். லலிதன் என்ற கந்தர்வன் லலிதா என்னும் கந்தர்வ கன்னிகையை மணந்தான். இருவரும் ரூபலாவண்யமுள்ளவர். அந்யோந்யம் அதிக அன்பு பூண்டவர். ஒரு க்ஷணமேனும் ஒருவரைவிட்டு ஒருவர் பிரியார். புண்டரீகனது ஸபையிலே லலிதன் தனியாகப்பாட நேர்ந்தது. லலிதையையே மனதில் எண்ணிக் கொண்டு பாடினான். பாட்டிலே பல தவறுகள் நேர்ந்தன. இதைப் புண்டரீகன் அறிந்து சினங்கொண்டான். லலிதனை ராக்ஷஸனாகும்படிச் சபித்தான். இதை உணர்ந்த லலிதை தன் கணவன் கதியை நினைத்துக் கதறி அழுதாள். அவன் பின் சென்று திரிந்தாள். தற்செயலாக ஒரு முனிவரது ஆச்ரமத்தைக் கண்டாள். மஹரிஷியைப் பணிந்து தன் மணாளன் சாபம் நீங்க வழி கேட்டாள். அவர் பக்தரது இஷ்டத்தைப் பூர்த்தி செய்யும் காமதா ஏகாதசியை உபதேசித்தார். அதை, அவள் அநுஷ்டித்துத் தன் கணவனது சாபத்தை அகற்றினாள். எந்த ஆசை கொண்டு இவ்வேகாதசியை அநுஷ்டித்தாலும் அவ்வாசை பூர்த்தியாவது திண்ணம். [காமத்தைத் தருமிது.]

11. வரூதிநீ—வைசாக கிருஷ்ண ஏகாதசியை வருதிநீ என்றழைப்பார்கள். இது ஸகல பாபங்களையும் அகற்றி ஸௌபாக்யத்தை அளிக்கும். பிறவிக் கடலைக் கடக்க இதைத் தோணி எனலாம். மாந்தாதாவும் துந்துமாரனும் இதைக் கொண்டு வானுலகேகி மேன்மை பெற்றனர். பிரும்மனது ஐந்தாம் தலையை அறுத்த சிவன் வருதிநீயால் அப் பாபத்தை அகற்றினர். தானங்களில் சிறந்தது அன்னதானம். அதை விட மிகச் சிறந்தது வித்யாதானம். வருதிநீ விரதம் வித்யா தான பலனை அளிக்க வல்லது. அன்று செய்யும் சிறிய தானமும் ஆயிரம் மடங்கு பயனை அளிக்கும். எந்த ஏகாதசியிலும் உணவு, தாம்பூலம், சந்தனம், புஷ்பம், நித்ரை, எண்ணெய், தேஹப் பயிற்சி முதலியவைகளைச் செய்யலாகாது. [ஸேனைபோல் நம்மைக் காக்குமிது.]

12. மோஹினீ:—முன்பு ஒரு ஸமயம் ஸ்ரீராமசந்த்ரமூர்த்தி தன்குலகுருவான வஸிஷ்டரை நோக்கி, ஸத்குரோ! ஸகல பாபங்களையும் அகற்றவல்லதான உத்தம விரதத்தைக் கூறுங்கள் என்றார். வஸிஷ்டர் கூறினர். ராம! வைசாக சுக்ல ஏகாதசி மோஹினீ எனப்படும். அதைப் போன்ற உத்தம விரதம் உலகிலில்லை. மோஹத்தையகற்றுவது மோஹினீ என்ற ஏகாதசி. ஸரஸ்வதி நதிக்கரையில் பத்ராவதி என்றோர் பட்டணமுண்டு. அதை சந்த்ரவம்சத்திலுதித்த த்ருதிமான் என்ற அரசன் ஆண்டு வந்தான். அந்நகரிலே தனபாலன் என்றோர் வைச்யன் இருந்தான். அவன் மிக்க விஷ்ணு பக்தன். அவனுக்கு ஸுமநஸ் த்யுதிமான் மேதாவி ஸுக்ருதன் த்ருஷ்டபுத்தி என ஐந்து புதல்வர் பிறந்தனர். த்ருஷ்டபுத்தி துஷ்டபுத்தி கொண்டான், குடிப்பான், பிறர் மனைவியைப் பெண்டாளுவான். தேவநிந்தைச் செய்வான். பெரியோரைப் பழிப்பான். இவனது துராசாரத்தைக் கண்டு இவன் தந்தை மனம் நொந்தார். இவனை வீட்டைவிட்டு விலக்கிவிட்டார். களவாடி காமசுகத்தைப் பெற கருதினன். காவலாளிகள் கையில் சிக்கினன். பல சிக்ஷைகளைப் பெற்றான். நோய் வாய்ப்பட்டு சொல்லொணாத் துன்ப மெய்தினன். முற்பிறவியின் புண்யத்தால் கௌண்டின்ய முனிவரது ஆச்ரமத்திற்கு வந்தான். அவர் கங்கையில் புனலாடிக் கரை ஏறினர். அவர் உடலிலிருந்து ஓர் கங்கைதுளி அவன் மேல் விழுந்தது. உடனே அவன் தனது பாபத்தை நினைத்து வருந்தினன். முனிவரைச் சரணமடைந்து நற்கதிபெற வழி வினவினன். மோஹினியை அவர்கூற, அதை அநுஷ்டித்து த்ருஷ்டபுத்தி வைகுண்டம் சென்றான். [மோஹம் அகலும்.]

13. அபரா:—ஆனி க்ருஷ்ண ஏகாதசி அபரா எனப்படும். அன்று பகவானை த்ரிவிக்கரமராகப் பூஜிக்க வேண்டும். ப்ரும்மஹத்தி பொய்சாக்ஷிகூறல் குருநிந்தை முதலிய பாபங்கள் அபரையால் அகலும். அன்றியும் ப்ரயாகையில் மாகஸ்நானம் செய்தல் காசியில் சிவராத்ரி விரதமிருந்து பூஜித்தல் கயையில் பிண்டமளித்தல் ஸ்ரீ கேதாரேசுவர தர்சனம் பதரீகாச்ரம யாத்ரை முதலியவைகளால் எந்த புண்யம் கிட்டுமோ அதை அபரை அளிக்கும்.

14. நிர்ஜலா:—ஆனிசுக்ல ஏகாதசியை நிர்ஜலா என்று அழைப்பர். ஒரு ஸமயம் தர்மராஜன் வேதவ்யாஸரை வணங்கி கலியுலுண்டாகும் துன்பத்தை அகற்ற மிகவும் சுலபமான உபாயத்தைக் கூறும்படி வேண்டினர். ஏகாதசி உபவாஸத்தை தவிர வேறு ஸுலபமான மார்க்கமில்லை. இதே ஸகல சாஸ்த்ரங்களிலும் கூறப்படும் தத்துவம் என்று வியாஸர் உரைத்தார். இதைக் கேட்டிருந்த பீமன் முனிச்ரேஷ்டரே! என்னுடன் பிறந்தாரும் தாயும் மனைவியும் அந்த வ்ரதம் அநுஷ்டிக்கின்றனர். என்னையும் உபவாஸமிருக்கும்படி கூறுகின்றனர். ஒரு வேளை மாத்ரம் புஜித்து மற்றோர் வேளை உபவாஸம் இருப்பதே என்னால் ஆகாத காரியம்! நான் எங்ஙனம் உபவாஸமிருப்பது? என் வயிற்றில் விருகமென்றோர் அக்நியுளது. அளவற்ற அன்னமளித்தால் அன்றி அது அடங்குவதில்லை. ஆண்டுக்கோர் முறை ஒரே தினம் யான் உபவாஸமிருக்க முடியும். அதனால் ஸகல ஏகாதசிகளது பயனையும் யான் பெறவேண்டும். அத்தகைய ஏகாதசியைக் கூறுமென்றான். வியாஸரும் தனக்குக் கிருஷ்ணன் சொன்னபடி நிர்ஜலா ஏகாதசியன்று ஜலமுமருந்தாது இருத்தல் வேண்டுமென்றார். அங்ஙனமே பீமன் உபவாஸமிருந்து த்வாதசியன்று புஜித்தான். ஆதலால் அன்று முதல் பாண்டவத்வாதசி என்றும் காரணப் பெயர் வழங்கியது. பீம ஏகாதசி என்றும் பெயர். [துன்பத்தை அகற்றுகிறது.]

15. யோகிநீ:—ஆடி கிருஷ்ண ஏகாதசியை யோகிநீ என்றழைப்பார்கள். அளகாபுரியில் குபேரனுக்கு ஒரு பணியாளனிருந்தான். அவன் பெயர் ஹேமமாலி. அவன் குபேரனது சிவபூஜைக்குப் புஷ்பம்கொண்டு கொடுக்கும் வேலை செய்பவன். அவன் மனைவி விசாலாக்ஷி என்பவள். மிக அழகுள்ளவள். அவளிடத்தில் ஹேமமாலிக்கு அதிக அன்புண்டு. ஆதலால் அவன் ஒருநாள் மலர் கொண்டு வராமல் மனைவியுடன் ஸந்தோஷமாகப் பேசிக்கொண்

டிருந்தான். பூஜையில் உட்கார்ந்த யக்ஷராஜன், புஷ்பம் வராததைக்கண்டு சினங்கொண்டான். இந்தக் குற்றம் செய்த ஹேமமாலியைப் பதினெட்டு வைசயான குஷ்ட ரோகத்தால் கஷ்டப்படும்படி சபித்தான். ஆயினும் ஹேமமாலி சிவபூஜைக்கு ஸகாயம் செய்த புண்யத்தால் அந்நோயுடனிருந்தாலும் பூர்வஜன்ம நினைவு அவனை விட்டகலவில்லை. ஆதலால் தன் விதியை நினைத்து வருந்தினன். மேருமலையில் தவம்புரியும் மார்க்கண்டேயரைச் சரணமடைந்தான் இந்நோயகல வழிகேட்டான். அவர் யோகினியை உபதேசித்தார். அன்று உபவாஸம் இருந்து விதிப்படி பகவானைப் பூஜித்தான். உடனே அவன் நோய் அகன்றது. அளகாபுரி சென்றுன். [குஷ்டரோகத்தை அகற்றும் இது.]

16. சயினீ:—ஆடி சுக்ல ஏகாதசி சயினீ எனப்படும். மஹாபலியின் கர்வத்தை அடக்க பகவான் வாமனரூபங் கொண்டாரல்லவா? அவர் த்ரீவிக்ரமராய்த் தோன்றி பலியைப் பாதாளத்திற்கு அனுப்பினர். அங்கு பக்தனை பலீயின் முதுகின்மீது தனது சரீரத்தை வைத்தார். மற்றோர் உடலெடுத்து பாற்கடலில் பன்னக சயனத்தில் படுத்துறங்கினர். கார்த்திகை மாதத்தில் பகவான் எழுந்திருக்கிருர். அந்த நான்கு மாதங்களும சாதுர்மாஸ்யம் எனப்படும். ஆவணியில் காய்கறிகளையும் புரட்டாசியில் தயிரையும் ஐப்பசியில் பாலையும் கார்த்திகையில் பருப்புகளையும் சாப்பிடலாகாது. [சயினீ ஏகாதசியன்று தீபதானம் செய்வது சிறந்த தர்மம்.]

17. காமிகா —ஆவணி கிருஷ்ண ஏகாதசிக்கு காமிகா என்று பெயர். இவ்வேகாதசி வ்ரதம் செய்வோர் மோக்ஷமடைவர். துளஸி தளத்தால் பகவானை அர்ச்சிக்க வேண்டும். அதனுல் ஒருபாரம் ஸ்வர்ணதானம் செய்த பலனைப்பெறலாம். இச்சமயம் நெய் தீபமேற்றுவதும் தீபதானம் செய்வதும் புண்யத்தை அளிக்கத்தக்கன. [இதன் மஹிமையைப் பக்தியுடன் படிப்போர் வைகுண்டம் செல்வர்.]

18. புத்ரதா:—ஆவணி சுக்ல ஏகாதசியைப் புத்ரதா என்பர். த்வாபர யுகத்தில் மாஹிஷ்மதீபுரியை மஹீஜித் என்றோர் அரசன் ஆண்டு வந்தான். அவன் புத்ரபாக்யமின்றி வருந்தினன். பெரியோரை அழைத்தான். "இப் பிறவியில் யானொரு பாதகத்தையும் செய்யவில்லை. யான் மக்கட் பேறின்றி வருந்தக் காரணம் யாது?" என்று வினவினன். அவர்கள் அரசனை அரண்மனையிலிருக்கச் சொல்லி

அரண்யம் சென்றனர். ஆங்கு லோமசர் எனும் முனிவரைக் கண்டு பணிந்தனர். அவர் ஸாதுக்களை வரவேற்று மானடப் பிறவி பரோபகாரத்திற்காகவே படைக்கப்பட்டது. அதைச் செய்யாதவன் விலங்கிற்கு பமமாவான். என்னால் தங்களுக்கு என்ன உதவி வேண்டும்? என்று வினவினார். வந்தவர் தங்கள் மன்னனுக்கு ஒருமகன் பிறக்கும் வழியைக் கூறும்படி வேண்டினர். லோமசர் புத்ரதா ஏகாதசி உபவாஸத்தையே அதற்கு உபாயமாகக் கூறினார். அம்மன்னன் முற்பிறவியில் செய்த பாபத்தையும் ஞானக்கண்ணாலறிந்து உரைத்தார். இவ்வரசன் முற்பிறவியில் ஒரு வைச்யனாக இருந்தான். வியாபார நிமித்தம் வெளியூர் சென்றான். இடைவழியில் தாஹத்தால் வருந்தி ஒரு தடாகத்திற்குச் சென்றான். அங்கு ஒரு பசு ஜலமருந்திக்கொண்டிருந்தது. அது ஜலத்தைக் கலக்கி விடுமென்று எண்ணி ஓட்டி விட்டு நீர் குடித்தான். ஆதலால் அவனுக்குப் புத்ரன் பிறக்கவில்லை என்றார். பெரியோர்கள் அரசனிடம் வந்து இதைக்கூறி அவ்வேகாதசி விரதத்தைப் பக்தி சிரத்தையுடன் செய்து வைத்தனர். உடனே அரசனுக்கு ஓர் அற்புதமான ஆண் மகவு பிறந்தது. [புத்ரபாக்யம உண்டாகும்.]

19. அஜா:—புரட்டாசி கிருஷ்ண ஏகாதசி அஜா எனப்படும். அதை அநுஷ்டித்தால் முற்பிறவியில் செய்த பாபங்களகலும். அரிச்சந்த்ர சக்ரவர்த்தி முன் வினையால் ராஜ்யத்தை இழந்தான். மனைவி மக்களை விற்க நேர்ந்தது. தானும் ஓர் சண்டாளனிடம் அடிமையாக நேர்ந்தது. அச்சமயம் தற்செயலாக கௌதம முனிவரைக்கண்டான். அவர் அஜா ஏகாதசியை உபதேசித்தார். அதை விதிப்படி செய்து சக்ரவர்த்தி மனைவி மக்களுடன் ராஜ்யத்தைப் பெற்று ஸுகமாக வாழ்ந்தான்.

20. பத்மநாபா:—புரட்டாசி சுக்ல ஏகாதசியைப் பத்மநாபா என்றழைப்பர். ஸூர்யவம்சத்தில் மாந்தாதா என்றோர் அரசனிருந்தான். அவன் மநுநீதி தவறாது ஆட்சி புரிந்தான். அவன் நாட்டிலே ஒருவகைக் குறையுமில்லை. ஒரு ஸமயம் மூன்றாண்டு அவன் ஊரிலே மழை பொழியாதொழிந்தது. மக்கள் வருந்தினர். குடிகள் கோனிடம் முறையிட்டனர். அவன் தானொரு குற்றமும் செய்யாததால் மழை பெய்யாத வகை யாதென அறியாது விழித்தான். வனம் சென்று ஆங்கிரஸ முனிவரைப் பணிந்தான். மழையுண்டாக வரங் கேட்டான். அவர் உன் ராஜ்யத்திலே ஒருவன் தன் தர்மத்தைவிட்டுப் பிறர் தர்மத்தைக் கைக்கொண்டுதவம்

செய்கிருன். அவனைக் கொன்ருல் மழை பொழியும் என்ருர். அரசன் அவனைக் கொல்ல மனமில்லாது, முனிவரே! வேறு வழி யிருந்தால் கூறும் என்ருன். மஹரிஷி அரசனது கருணையைக்கண்டு மிகக் களித்தார். பத்மா ஏகாதசியைக் கூறினுர். மாந்தாதா அதை அநுஷ்டிக்க, வான் பொழிந்து பூமி செழித்தது.

21. இந்திரா :— ஐப்பிசி கிருஷ்ண ஏகாதசிக்கு இந்திரா எனப் பெயர். கிருதயுகத்தில் மாஹிஷ்மதிபுரியை இந்த்ரஸேனன் என்ற அரசன் ஆண்டு வந்தான். ஒருநாள் அவன் ஸபைக்கு நாரதர் வந்தார். வேந்தன் விதிப்படி அவரை அர்ச்சித்தான். அவர் தான் யமலோகத்திலிருந்து வருவதாயும் அங்கு நரகத்தில் துன்புறும் இந்த்ரஸேனனது தந்தை இந்திரா ஏகாதசி விரதத்தைச் செய்து தன்னைக் கரையேற்றும்படி புத்ரனிடம் கூறச் சொன்னதாகவும் உரைத்தார். இந்த்ரஸேனன் நாரதர் மூலமாய் அந்த விரதத்தைக் கேட்டறிந்தான். விரதம் செய்து தந்தையின் பொருட்டு ஸாளக்ராமத்தினருகே சிராத்தம் செய்தான். அதனுல் ஸ்வர்க்கம் சென்ற தந்தை மைந்தனை ஆசீர்வதித்தார்.

22. பாபாங்குசா :— ஐப்பிசி சுக்ல ஏகாதசியைப் பாபாங்குசா என்பார்கள். பாபத்தை அகற்ற அது அங்குசம் போன்றது. இதை அநுஷ்டிப்போர் யமயாதனையைக் கண்ணுல் காணமாட்டார். கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களாலும் யாகத்தாலும் தானத்தாலும் எப்பயனுண்டோ அவைகளை இவ்வொரு ஏகாதசியே அளிக்கவல்லது. சாஸ்த்ர முறையை அறியாது ஊராருக்காகவோ அல்லது கபடமாகவோ இதை அநுஷ்டித்தாலும் பயனை அளிக்கும் என்ருல், விதி வழுவாது செய்வோரைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ?

23. ரமா :— கார்த்திகை கிருஷ்ண ஏகாதசியை ரமா என்பார்கள். முசுகுந்தன் என்ற அரசனுக்கு சந்த்ரபாகா என்னும் ஓர் அழகிய கன்னிகை இருந்தாள். அவளது தந்தை, சந்த்ரஸேனனது புதல்வனுன சோபனன் என்பவனுக்கு அவளையளித்தார். ஒரு ஸமயம் சோபனன் மாமனரில்லத்திற்கு வந்தான். அன்று ஏகாதசி ஆனதால் அரசனது கிங்கரர்கள் வீதிதோறும் "இன்று ஏகாதசி, எவரும் புஜிக்கலாகாது! உபவாஸமிருந்து விஷ்ணுவைப் பூஜிக்க வேண்டும்!" என்று பறை சாற்றினர். இதைக்கேட்ட சோபனன், ஐயா! யான் மிக்க துர்பலமானவன்! ஒரு நாள் உணவில்லாதிருப்பதெப்படி? என்று வருந்தினுன். அவன் மனைவியும், ஐயனே!

என் தந்தை எக்குற்றத்தையும் மன்னிப்பார்! எவராயினும் ஏகாதசியன்று புஜித்தால் அவரைக் கடுமையாக சிக்ஷிப்பார்! யான் என் செய்வேன்! என வருந்தினுள். முடிவில் அவன் உபவாஸ மிருந்தான். பசியால் இரவெல்லாம் வருந்தி காலையில் சோபனன் இறந்தான்! விதிப்படி அவனது சவத்தைத் தீயிலிட்டனர்! சந்த்ரபாகை கணவனையே நினைந்து வருந்தினுள்.

சில நாட்சென்றபின் தீர்த்தயாத்திரைக்குச் சென்ற ஸோமசர்மா என்ற பெரியார் சந்த்ரபாகையினிடம் வந்தார். பெண்ணே! உனது கணவன் மந்த்ரமலைச் சாரலிலே ஓர் திவ்ய நகரத்தை ஆண்டு வருகிறுன்! என்ருர். அதைக் கேட்ட சந்த்ரபாகை தந்தையுடன் மந்த்ர மலைக்குச் சென்ருள். வாமதேவ முனிவரது ஆச்ரமத்தருகே தன் பதி ராஜ்யபாரம் செய்யக் கண்டாள். அவ்வரசனும் தன் மனைவியைக் கண்டு களித்து யான் ச்ரத்தையில்லாமல் ரமா ஏகாதசியை அநுஷ்டித்தேன்! ஆதலால் இவ்வுத்தம நகரம் கிட்டியது! இது விரைவில் அழிந்துவிடும்! இதற்கு என் செய்வதென வினவினுன்? அவள் தான் செய்து வந்த ஏகாதசி புண்யத்தை அளித்தாள்! நகரம் சாச்வதமாயிற்று. இருவரும் இன்பமாகக் கூடி ரமித்தனர்.

24. ப்ரபோதினீ :— கார்த்திகை சுக்ல ஏகாதசிக்கு ப்ரபோதினீ என்று பெயர். பகவான் நித்ரையைவிட்டு எழுந்திருப்பதால் அதற்கு அந்தப் பெயர் தோன்றிற்று. ஸகல புஷ்பங்களாலும் மாதவனை அர்ச்சித்து எல்லாக் கனிகளையும் நிவேதனம் செய்யவேண்டும். துளஸியால் பகவானைப் பூஜிப்பவர் வைகுண்டம் செல்வர். துளஸியைத் தர்சிப்பது, தொடுவது, பெயரைச் சொல்வது, துதிப்பது, துளஸியை வைத்து வளர்ப்பது, ஜலம் விடுவது, பூஜிப்பது என்று ஒன்பது வகையான துளஸி பக்தியைச் செய்வோர், கோடியுகம் விஷ்ணு லோகத்தில் வஸிப்பர்.

25. கமலா :— அதிகமாக வரும் ஏகாதசிக்குக் கமலா என்று பெயர். அதிக மாதத்திற்குப் புருஷோத்தம மாதம் என்று பெயருண்டு. அவந்திதேசத்தில் சிவசர்மா என்று ஓர் அந்தணனிருந்தான். அவனுக்கு ஐந்து புதல்வர்களுண்டு. அதில் கடைசி குமாரன் ஜயசர்மா என்பவன். அவன் மிக்க பாபி. அவனைப் பெற்ருேர் வீட்டைவிட்டுத் துரத்திவிட்டனர். அவன் ஹரிமித்ரர் என்னும் மஹரிஷியின் ஆச்ரமஞ் சென்ருன். ஆங்கு கமலா ஏகாதசியின் பெருமை முனிவரால் கூறப்பட்டது. இவனும் அதை விதிப்படி அநுஷ்டித்தான்.

